Phone: No. 2241

Regd. No. M. 5934

**ஓட்டர் ஜாபிதாவில் ஜாதிப் பெயர் இராது**

புதுடெல்லி, ஏப். 24—1961-ல் தயாரிக்கப்படும் ஓட்டர் ஜாபிதாவில் ஜாதிப் பெயர்கள் சேர்க்கப்பட மாட்டா என்று உதவி உள்நாட்டு மந்திரி ஸ்ரீமதி வயலட் ஆல்வா கூறினர்.

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

மலர் 15] பக்கம் 4 :: விலை அணு 1 [இதழ் 247

சென்னை 25-4-58 விளம்பி, சித்திரை-12 வெள்ளி (வெளியூர் 26-4-58 விளம்பி, சித்திரை-13 சனி)

**மரணவரி விலக்கு வரம்பு குறைகிறது**

புதுடில்லி, ஏப். 24—யூனியன் நிதிமந்திரி மொரார்ஜி தேசாய் மக்கள் சபையில் கொண்டுவந்துள்ள மரணவரி திருத்த மசோதாவில், மரணவரி விலக்கு வரம்பு ரூ 1 லட்சத்திலிருந்து ரூ 50,000க்குக் குறைக்கப்பட்டுள்ளது.

# குபேர் மந்திரி சபையை நீக்குக!

## புதிய மந்திரி சபை அமைக்க அனுமதியுங்கள்

### ஜனநாயக மரபை கௌரவப்படுத்துங்கள்

பாண்டிச்சேரி, ஏப். 24—

பாண்டிச்சேரி சட்டசபையில் இன்று குபேர் மந்திரி சபை பெரும் தோல்வி அடைந்தது. நேரடியான ஓட்டெடுப்பில் சர்க்கார் தரப்பினர் தோல்வி அடைந்துவிட்டதால், மந்திரி சபை ராஜிநாமா செய்து புது மந்திரிசபை அமைய அனுமதிக்கவேண்டும் என்று எதிர்க்கட்சித் தலைவர் வி. சுப்பையா கோரியுள்ளார்.

பாண்டிச்சேரி அரசியலில் பெரும் பரபரப்பைக் கிளப்பியுள்ள இந்த சம்பவத்தின் முழு விவரம் பின்வருமாறு:

பாண்டிச்சேரி சட்டசபை ஏப்ரல் 24ம் தேதி கூடியது. சமீபத்தில் சட்டசபை கூட்டத்திலிருந்து எதிர்க்கட்சியினரும், திரு. புருஷோத்தம ரெட்டியார் தலைமையிலுள்ள காங்கிரஸ்காரர்களும் வெளிநடப்பு செய்ததும், இதனால் குபேர் மந்திரி சபைக்கு பெரும்பான்மையில்லாமல்போய், அதன் காரணமாக சட்டசபையொத்திவைக்கப்பட்டதும் நினைவிருக்கலாம். இன்று மீண்டும் சட்டசபைக் கூட்டம் ஆரம்பமானதும், ஆளும் கட்சியினர் தங்களுக்கு பெரும்பான்மை இல்லையென்பதற்காக ஜனநாயக மற்ற முறையில் சட்டசபை ஒத்திவைக்கப்பட்டதை எதிர்த்து எதிர்க்கட்சித் தலைவர் தோழர் வி. சுப்பையா ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்பினர்.

**குபேர் தீர்மானம்**

பின்னர் நிதிக் கமிட்டிக்கு தேர்ந்தெடுக்கப்படுவதற்காக ஒரு பெயர் ஜாபிதாவை சமர்ப்பித்து, அதனை அங்கீகரிக்கும்படி காங்கிரஸ் கட்சித் தலைவர் குபேர் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். இந்தத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டதில் மொத்தமுள்ள

(2-ம் பக்கம் பார்க்க)

**அணு ஆயுத விமானங்கள் சமாதானத்திற்கு ஆபத்து**

**ஐஸன்ஹோவருக்கு குருஷ்சேவ் கடிதம்**

மாஸ்கோ, ஏப். 23—

அணு குண்டுகளையும், ஹைட்ரஜன் குண்டுகளையும் ஏற்றிக்கொண்டு, அமெரிக்க விமானங்கள் சோவியத் எல்லையை நோக்கிப் பறப்பது உலக சமாதானத்திற்குப் பேராபத்தாகும், என்று சோவியத் பிரதமர் குருஷ்சேவ் அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் குறிப்பிடுகிறார்.

அணு ஆயுத சோதனைகளை அமெரிக்கா நிறுத்தவிட்டால், சோவியத் யூனியனும் மீண்டும் சோதனைகளை மேற்கொள்ள வேண்டிவரும், என்றும் குருஷ்சேவ் அக்கடிதத்தில் எச்சரிக்கை செய்துள்ளார்.

## ஆவடியா? அமிருதசரஸா? எந்த முடிவு உண்மையானது?

### வரலாறு தீர்ப்பளிக்கட்டும்

**இ. எம். எஸ். நம்பூதிரிபாட் விளக்கம்**

திருவனந்தபுரம், ஏப். 24—

சமாதான முறைகளை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அனுசரிக்கும் என்று அமிருதசரஸில் எடுத்த முடிவு உண்மையானதா அல்லவா என்பதை மக்கள் முடிவு செய்வார்கள். ஆவடியில் சோஷலிஸத்தை 'சுரண்டி' ஆயுதமாகிய காங்கிரஸ் வாதிகள் செயல் முறையில் இதற்கேற்ப ஒன்றுமே செய்யவில்லை. எனவே யார் உண்மையாக நடக்கிறார்கள் என்பதை வரலாறு முடிவுசெய்யட்டும் என்று கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் இங்கு கூறினர்.

கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தில் பலாத்காரம் ஒரு விசேஷ அம்சம் என்று அடிப்படையாகக் கருதுவது உண்மையல்ல. இதற்கு மாறாக எங்கெல்லாம் எப்பொழுதெல்லாம் சமாதானபூர்வமாக மாறுதல்கள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளனவோ அங்கெல்லாம் அப்பொழுதெல்லாம் சமாதான முறைகளையே அனுசரிக்க அவாவுகின்றனர். இங்கிலாந்து உட்பட பல நாடுகளில் சமாதான பூர்வமாக மாறுதல்கள் சாத்தியம் என்பதை மார்க்ஸும் ஏங்கல்ஸுமே வரையறுத்துக் கூறியுள்ளனர், என்பது இங்கு குறிப்பிடத்தக்கது என்றார்.

பின்னர் ஏகபோக முதலாளித்துவ வளர்ச்சி ஏற்பட்ட கட்டத்தில் இத்தகைய சமாதான முறையில்மாறுதல்கள் ஏற்படும் சாத்தியப்பாடுகள் குறைந்தன, என்று லெனின் சுட்டுகிறார். சுரண்டப்பட்ட வர்க்கங்களை ஒடுக்குவதற்குப் பலாத்காரம் ஏவப்படும் காலத்தில் கம்யூனிஸ்டுகள் அகிம்சையின் பேரால் கட்டுண்டு கிடக்க மாட்டார்கள், என்று கூறினர்.

இரண்டாம் உலக யுத்தத்திற்குப் பிறகு, குறிப்பாகச் சீனப் புரட்சிக்குப் பிறகு, உலக ரீதியாகவே நிலைமையில் மாறுதல் ஏற்பட்டுள்ளது. சமாதான பூர்வமாக மாறுதல்கள் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் தோன்றியுள்ளன. இந்தியாவைப் பொறுத்தவரை, அதன் தேசியப்போராட்ட பாரம்பர்யம், ஜனநாயகத்திற்கும் சோஷலிஸத்திற்குமாக வளர்ந்து வரும் இயக்கம் என்ற விசேஷப் பின்னணியில் இந்த நிலைமை விசேஷமாக காணப்படுகிறது என்றார்.

உதாரணமாக இந்த ராஜ்யத்தில் நாங்கள் ஓட்டு மூலம் அதிகாரத்திற்கு வந்துள்ளோம். அதோடு ஸ்பெயின் போன்ற நாடுகளில் ஐக்கிய முன்னணி சர்க்கார் நிர்வாகம் நடத்த அனுமதிக்கப்படவில்லை. இங்கு நாங்கள் இயங்கி வருகிறோம் என்றார். இத்தகைய சூழ்நிலைகளில்தான் அமிருதசரஸ் மாநாட்டில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி இந்த முடிவுக்கு வந்தது என்றார்.

## இந்திய முறையில் சிந்திக்கிறார்கள்

### அமிர்தசரஸ் கம்யூனிஸ்ட் மாநாடுபற்றி பிரதமர் நேரு கருத்து

**கேரளத்தில் அமோக வரவேற்பு**

திருவனந்தபுரம், ஏப். 24—

"சமீபத்தில் அமிர்தசரஸில் கூடிய கம்யூனிஸ்ட் கட்சி மாநாடு, மிகவும் சரியான முறையில் அதாவது இந்திய முறையில் பிரச்னைகளை அணுகியிருக்கிறது" என்று திருவனந்தபுர பொதுக்கூட்டத்தில், பிரதமர் நேரு கூறினர்.

அவர் மேலும் பேசுகையில், "இவ்விதம் கம்யூனிஸ்ட் கட்சியானது மேலும் மேலும் இந்திய முறையிலேயே சிந்தித்து பிரச்னை அணுகினால், சர்வதேச அர்த்தப்படி அது ஒரு கம்யூனிஸ்ட் கட்சியாக இருக்க முடியாது என நினைக்கிறேன். என்றாலும் இது அவர்கள் விஷயம்" என்றும் கூறலானர்.

பாரதப் பிரதமர் பண்டித நேரு அவர்கள் இன்று கேரள ராஜ்ய தலைநகரான திருவனந்தபுரத்துக்கு விஜயம் செய்தார். கேரளத்துக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று பல மாதங்களுக்கு முன்பாக கேரள முதலமைச்சர் நம்பூதிரிப்பாட் அவர்கள் நேருவுக்கு அழைப்பு விடுத்திருந்தார். இங்கு விஜயம் செய்த நேருவுக்கு கேரள கவர்னர் ராமகிருஷ்ண ராவ், முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட், திருவனந்தபுரம் மேயர் ஆகியோர் விமான நிலையத்தில் மாலையிட்டு வரவேற்றனர். பெண்கள் ஆரத்தி எடுத்து வாழ்த்துப் பாடினர். பின்னர் நேருவும், திருமதி இந்திரா காந்தியும், மத்திய உணவு உதவி மந்திரி தாமஸும் திறந்த காரில் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். அமைதியின் சின்னமான வெண்புறாக்கள் பறக்க விடப்பட்ட காட்சி, கோலாகலமாயிருந்தது.

**நேரு சொற்பொழிவு**

சங்கலாசாலை மைதானத்தில், மலையாளிகளின் தனிச் சிறப்புகளுடன் அமைந்த அலங்கார மேடையிலே நேரு நின்று பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"ஓ நீங்கள் தேசியக் காங்கிரசுடன் நீண்ட நெடுங்காலமாக பிணைப்புக் கொண்டவராச்சே! அப்படியிருக்க, கம்யூனிஸ்ட் கட்சியினால் ஆதிக்கம் செலுத்தப்படும் ஒரு ராஜ்யத்துக்கு விஜயம் செய்கிறீர்களே! என்று சிலர் என்னை கேள்வி கேட்கிறார்கள். வாஸ்தவம்தான். எவ்வளவு காலம் என்று எனக்கே தெரியாத அவ்வளவு காலமாக நான் காங்கிரஸுடன் பிணைப்புக் கொண்டிருக்கிறேன் என்பது மெய்யே. ஒருவேளை கடந்த 50 ஆண்டுகளாக காங்கிரஸுடன் தொடர்பு கொண்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன்.

இதுவொருபுறம், மறுபுறமோ, இப்பொழுது கேரளத்தில் ஆட்சி புரியும் சர்க்கார் காங்கிரஸ் சர்க்

(2-ம் பக்கம் பார்க்க)

## கேரள நிலைமையை பாரபட்சமின்றி பரிசீலனை செய்க!

### தேபருக்கு ஏ. கே. கோபாலன் வேண்டுகோள்

பம்பாய், ஏப். 24—

கேரளத்திலுள்ள நிலைமையை பாரபட்சமின்றி பரிசீலனை செய்யும்படியும், கேரள சர்க்காரின் பா[illegible] ஒரு ஜனநாயகப் போக்கையும், நேர்மையான கண்ணோட்டத்தையும் கடைப்பிடிக்கும்படி கேரளக் காங்கிரஸ்காரர்களுக்கு புத்திமதி கூறும்படியும், தோழர் ஏ. கே. கோபாலன், காங்கிரஸ் அக்ராசனர் தேபரைக் கேட்டுக் கொண்டுள்ளார். (தற்பொழுது தேபர் கேரளத்திற்கு வந்துள்ளார்).

இது சம்பந்தமாக தோழர் ஏ. கே. ஜி. வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், கேரளக் காங்கிரஸ்காரர்கள், முஸ்லீம் லீக், போன்ற வகுப்பு வாதக் கட்சிகளுடனும், பி. எஸ். பி. போன்ற சமூக விரோத சக்திகளுடனும் வெளிப்படையாகவே கூட்டுறவு கொண்டுள்ளார்கள், என்று குற்றம் சாட்டினர்.

திட்டக் கமிஷனுடைய சிபார்சுகள், இன்னும் இதர திட்டங்கள் ஆகியவை காங்கிரசினுடைய பிரகடனப்படுத்தப்பட்ட கொள்கைக்கு எவ்விதத்திலும் முரண்பட்டதல்ல; ஆயினும் இது சம்பந்தமாக கேரள சர்க்கார் எடுத்த நடவடிக்கைகளுக்கு உலைவைக்கும் போக்கிலேயே கேரள காங்கிரஸ்காரர்கள் நடந்து கொண்டனர் என்பதற்குப் பல உதாரணங்களைத்தான் காட்டமுடியும் என்றும் ஏ. கே. கோபாலன் கூறினர்.

அவரைப் பின்பற்றுபவர்கள் கேரளத்தில் இவ்வாறு நடந்து கொள்வதைப் பற்றி திரு. தேபர் பகிரங்க விசாரணையை நடத்த முன்வருவாரா, என்றும் ஏ.கே. கோபாலன் கேட்டுள்ளார்.

## தமிழ்நாடு கிராமதான மாநாடு வத்தலக்குண்டில் 26, 27 தேதிகளில்

**தோழர் ஜீவா கலந்துகொள்கிறர்**

மதுரை, ஏப். 25—

தமிழ்நாடு கிராமதான மாநாடு ஏப்ரல் 26, 27 தேதிகளில் மதுரை மாவட்டம் வத்தலக்குண்டில்நடைபெறுகிறது. தமிழ்நாடு பூராவிலுமிருந்து 500-க்கு மேற்பட்ட கிராமதான ஊழியர்கள் மாநாட்டில் பங்கு கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மாநாட்டில் அமைச்சர் சுப்பிரமணியம், ம. பொ. சிவஞானம், ப. ஜீவானந்தம், ப. சு. சின்னதுரை முதலிய சர்வ கட்சித் தலைவர்கள் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றுகிறார்கள்.

அன்று ஊழியர் கூட்டத்திலும் மாலை பொதுக்கூட்டத்திலும் தோழர் ஜீவா பேசுகிறர்.

## அண்ணாமலை மாணவர் 73 பேர்மீது வழக்கு

### மீண்டும் சர்க்காரின் ஆத்திரமூட்டும் நடவடிக்கை

சிதம்பரம், ஏப். 24—

சமீபத்தில் அண்ணாமலை சர்வகலாசாலையில் நடைபெற்ற சம்பவங்கள் சம்பந்தமாக, அண்ணாமலை நகர் போலீசார் 73 பேர்கள் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்துள்ளனர்.

ஏப்ரல் 30-ந் தேதியன்று இந்த 73 பேர் சிதம்பரம் சப் மாஜிஸ்ட்ரேட் முன் ஆஜராக வேண்டுமாம்.

# ஜனசக்தி

சென்னை 25-4-1958


## காங்கிரஸ் ஆட்சியில் சொல்லும் செயலும்

சர்க்கார் அலுவல்கள் இனி சடுதியிலே நடக்கும், சிவப்பு நாடா சம்பிரதாயத்திற்குச் சீட்டுக் கிழித்து விட்டோம் என்று பாகல்மேடு என்னுமிடத்தில் நடைபெற்ற மாநாட்டில் சென்னை சர்க்கார் சார்பில் சண்டப்பிரசண்டம் செய்யப்பட்டது.

ஆனல் அந்தப் பாகல்மேடு மாநாடு ஒரு பகல்நேர நாடகம் போல ஆகிவிட்டது. சிவப்பு நாடா மீண்டும் சிம்மாதனமேறி விட்டது. அதிகாரிகளின் மாமூல் தாமதங்கள் வஞ்சந் தீர்த்துக் கொள்ளும் முறையிலே அதிகரித்து விட்டன. யதார்த்தம் கசப்பான ஒன்ருகி விட்டது.

அண்மையில் மஹாபலிபுரத்தில் ஒரு விவாத அரங்கு நடத்தப்பெற்றது. சர்க்கார் அதிகாரிகள் அபிவிருத்தித் திட்டங்களில் பொதுஜன ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெறுவதெப்படி என்பதே விவாதத்தின் பொருள்.

முதலமைச்சர் காமராஜர் அதிகாரிகள் மக்களோடு பழக வேண்டும், மக்கள் கேட்கும் ஆயிரத்தெட்டுக் கேள்விகளுக்கும் பொறுமையுடன் பதிலளிக்க வேண்டும், அபிவிருத்தி வேலைகள் பற்றி மும்முரமாகப் பிரசாரம் செய்தல் வேண்டும் என்று அறவுரை புகன்றுள்ளார்.

இது வெறும் சம்பிரதாயப் பிரசாரம் என்பதை அரசியல் குழந்தை கூட எடுத்துக் கூறும். திட்ட வேலைகளில் அதிகாரிகள் செய்து வரும் அட்டகாசங்களும், அதற்கு உடந்தையாக சர்க்கார் கொள்கை இருப்பதும் ஊரறிந்த விஷயம்.

கிராமப்புறங்களில் பொது மக்களுக்கு திட்ட வேலைகளில் கருத்தில்லை, கவனமில்லை என்று குருட்டுத்தனமாகக் குற்றம் சாட்ட முடியுமா? முடியாது. நீண்ட நெடுங் காலமாகப் பின்தங்கிய நிலையில் கிடக்கும் மக்கள் நிச்சயமாகத் தமது முன்னேற்றத்திற்குரிய சின்னஞ் சிறு வாய்ப்புகளைக் கூடப் பயன் படுத்திக் கொள்வது இயல்பு.

ஆனல் அதிகாரிகள் போக்கும், தமது தேர்தல் வேலைக்கும், கட்சிப் பிரசாரத்திற்குமாக காங்கிரஸ்காரர்கள் செய்யும் சாகசங்களும் பொது மக்களுக்கும் வெறுப்பை அளிக்கின்றன. கிராமப் பகுதிகளின் தேவை என்ன? இத் தேவைகளில் பிரதானமாக நிற்பது என்ன? என்பதை உணர்ந்து, இதற்குப் பரிகாரம் காண முன் வருவதே பயனுள்ள வேலை, சரியானதும் கூட.

ஆனல் அப்படி நடப்பதில்லை. ரோடு முக்கியம் என்றுள்ள இடங்களில் பள்ளிக்கூடம் பற்றித் திட்டம். தமிழ் நாட்டைப் பொறுத்த வரை கிராமிய சுகாதாரம் மிக மோசமான நிலைமை இருக்கிறது. எனவே இதற்கு முதலிடம் அளிக்க வேண்டும் இதை சர்க்கார் கவனிப்பதில்லை.

மக்கள் சுய முயற்சியால் கால்வாய்கள் வெட்டி நீர்ப் பாசனம் பெற முயன்ருல் அதிகார வர்க்கம் தடையாக நிற்கிறது. பெரும் நிலப்பிரபுக்கள் தமக்கு என்று கால்வாய் வெட்டிஞல் உடனே சட்டவிரோதமாக இருந்தாலும் கிடைக்கிறது. அதிகாரிகளிடம் 'கைவலுத்தவன் பக்கம் நியாயம்' என்று காங்கிரஸ்வாதிகள் நடந்து ஊழலுக்கு முத்தாய்ப்பு வைக்கின்றனர்.

ஏகாதிபத்திய ஆட்சிக் காலத்தில் இருந்த அதிகார வர்க்கப் போக்கு அதிகாரிகளிடையே இன்றும் நீடிக்கிறது என்று காங்கிரஸ் சஞ்சிகையான "எகனுமிக் ரெவ்யூ"வே கூறுகிறது. காங்கிரஸ் எம். பி.க்கள் எம். எல். ஏ.க்களைக் கூட அதிகாரிகள் மதிப்பதில்லை அசட்டை செய்கிருர்கள் என்று உத்திரப் பிரதேச எம். பி.க்கள் புகார் கூறுகின்றனர்.

காங்கிரஸ் எம். பி.க்கள் பாடே இதானுல் சாமான்ய மக்கள் பாடு என்னவாக இருக்கும். இந்த அதிகார வர்க்க மனப்பான்மையை ஒழிப்பதற்குப் பதிலாக உரமிட்டு வளர்க்கிறது காங்கிரஸ் சர்க்கார். காங்கிரஸ் கட்சி.

எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பை மனப்பூர்வமாகக் கோருவதற்குப் பதிலாக அவற்றை எப்பாடுபட்டேனும் தடுத்து நிறுத்தப் பகீரதப் பிரயத்தனம் செய்கிறது சர்க்கார். எனவே இதை வெறும் நாடகம் என்று மக்கள் எடுத்துக்கொண்டால் புதுமையுண்டோ?

கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபை ஏற்பட்டவுடன் அதிகாரிகளின் போக்கில் மாற்றம் ஏற்பட முயற்சிகளை நடத்தியது, எவ்வித பாகுபாடுமின்றி சகல கட்சிகளின் பிரதிநிதிகளையும் கொண்ட குழுக்களை ஏற்படுத்தி நிர்மாண வேலைகளில் மக்கள் பங்கு கொள்வதை உத்திரவாதம் செய்து வருகிறது. இந்தக் காட்சியை கேரளத்தில் காணலாம்.

அதிகார வர்க்க மனப்பான்மை, கட்சி நலன் என்ற கண்ணேட்டத்துடன் மட்டும் காங்கிரஸ் எடுத்து வரும் நடவடிக்கைகள் மக்களிடை நம்பிக்கையை ஊட்ட முடியாது என்று சுட்டிக் காட்டுகிருேம்.

### கம்யூனிஸ்ட் கட்சி சென்னை ஜில்லாக் கமிட்டி காரியதரிசி அறிவிப்பு

சென்னை, ஏப். 25—

அமிருதசரஸ் கட்சிக் காங்கிரஸ் பற்றி ரிபோர்ட் செய்வதற்காக இன்று மாலை நடைபெறுவதாயிருந்த கட்சி அங்கத்தினர்கள் கூட்டம் ரத்து செய்யப்பட்டுள்ளது.

இன்றுமாலை இராயப்பேட்டை (புதுப்பேட்டை) பிள்ளையார் கோயில் மைதானத்தில் தோழர் எஸ். ஏ முருகானந்தம் பேசும் பொதுக் கூட்டத்தை முன்னிட்டும், மே தினத்தை ஒட்டி தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் இன்று நடைபெறவிருப்பதின் காரணமாகவுமே மேற்படி கட்சி உறுப்பினர் (ஜிபி.) கூட்டம் ரத்து செய்யப்பட்டுள்ளது என்று சென்னை ஜில்லாக்கமிட்டிக் காரியதரிசி தோழர் கே. முருகேசன் அறிவிக்கிருர்.

# பீதியின் பிரகடனமே!

## கம்யூனிஸ்ட் கட்சியின் முடிவுகளை தேபர் ஆட்சேபிப்பது ஏன்?

### அஜய் கோஷ் விளக்கம்

புதுடெல்லி, ஏப். 22—

கம்யூனிஸ்ட் கட்சிக்கு விரோதமாக காங்கிரஸ் அக்ராசனர் தேபர் வெளியிட்டுள்ள அபாண்டங்கள், காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குள் ஏற்பட்டுள்ள உடைசலையும் பீதியையுமே பகிரங்கமாகப் பிரகடனம் செய்கின்றன என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச்செயலாளர் அஜய்கோஷ் இங்கு கூறினர்.

கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ந்துவரும் செல்வாக்கும், அதற்கு ஏற்பட்டுள்ள பொது ஜன ஆதரவும், காங்கிரஸ்காரர்களுக்கு பெரிய அதிர்ச்சியைக் கொடுத்திருக்கின்றன என்றும் அஜய் குறிப்பிட்டார்.

மார்க்ஸியமும் ஜனநாயகமும் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லை முரண்பட்டவை என்று தேபர் கூறியுள்ளது சரியல்ல. இவை இரண்டும் ஒன்றிணைந்து செல்லும் பண்புகள். மார்க்ஸியத்தைப்பற்றித் தேபருக்கு ஏற்பட்டுள்ள அஞ்ஞானத்தின் விளைவாகத்தான் அவர் சமாதான வழியில் கம்யூனிஸ்ட்கள் செல்ல முடியாது என்று கூறுகிருர். சமாதான வழியில் சோஷலிஸம் ஒரு சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் சாத்தியமானது என்று மார்க்ஸே கூறியிருக்கிருர். இங்கிலாந்தில் இந்த முறையில் உள்ள மாறுதல்கள் ஏற்படும் என்று மார்க்ஸ் சுட்டியுள்ளார்.

ஒருவர் கிராசையால் ஏற்பட்ட ஏமாற்றத்தால் கோபமடையும் போது, மற்றவர்களைப்பற்றி தூஷணை கூறுவதும், உண்மையை மறைத்துப் பேசுவதும் இயல்பே. தேபருடைய அறிக்கையை இந்த ரீதியில் பார்த்தால் போதும்.

கம்யூனிஸ்ட் கட்சிமீது எத்தனைதான் கரிபூசிக் களங்க மேற்படுத்த நினைத்தாலும், அது நடக்காது மாருக அக்கட்சிக்குப் பொதுஜன ஆதரவு அமோகமாக அதிகரிக்கும் என்பது தேபருக்குத் தெரிந்த சமாசாரம் தானே. அப்படி இருந்தும் உண்மைக்கு எதிராக அவர் போர்க் கோலம் பூணுகிருர். இதன் பொருளும் இரகசியமும் அவருக்கே வெளிச்சம் என்ருர் அஜய்.

## இந்திய முறையில்.....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காரோ அல்லது காங்கிரஸுடன் தொடர்புள்ள சர்க்காரோ அல்ல என்பதும் மெய். நிலைமை இப்படியிருப்பதால் இயல்பாக ஒருவர் என்ன நினைக்கிருர்; சில அடிப்படை விஷயங்களில் காங்கிரஸ் கட்சியின் அங்கத்தினர்களுக்கும் கம்யூனிஸ்ட் கட்சியின் அங்கத்தினர்களுக்குமிடையே, பொருளாதார தத்துவத்திலோ, அரசியல் தத்துவத்திலோ வேறுபட்ட கருத்தோட்டம் இருக்கிறது. இது அனைவரும் அறிந்ததே.

ஆனல் தேசத்தின் வேலைகளை நிறைவேற்றுவதிலே, வேறுபாடுகளைக்காட்டிலும் உடன்பாடுகளே அதிகமாக இருக்கிறது. அடிப்படையில் அணுகும் முறை வேறுபட்டிருக்கத்தான் செய்யும். அந்த வேறுபாடுகளைப்பற்றி நான் விவாதிக்க விரும்பவில்லை" என்று பேசினர்.

### கம்யூனிஸ்டுகளைப்பற்றி

நேரு கம்யூனிஸ்டுகளைப்பற்றி குறிப்பிட்டபோது:

"இந்தியாவில் நமது சிந்தனையின் வேர்கள் இல்லாவிட்டால், ஒருவகையான அறிவாளிகளாகி யாரையோ பின் பற்றுகிறவர்களாகி விடுகிருேம். அதனுல் நமது சிருஷ்டித் திறனை இழந்து விடுகிருேம். இன்னெரு தேசம் இப்படிச் செய்தது, அப்படியே இந்த தேசத்திலும் செய்ய வேண்டுமென்ற மனேபாவம் இருப்பது சரியல்ல என்று சொல்ல விரும்புகிறேன், எனது கம்யூனிஸ்டு நண்பர்கள் முன்னுல் இதைச் சொல்ல நான்விரும்பாவிட்டாலும் சொல்ல நேரிட்டதற்காக, என்னை மன்னிக்கும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இப்படி நான் சொல்லுவதால், பிற நாடுகளின் படிப்பினைகளை இந்தியா கற்கக்கூடாதென்று அர்த்தமல்ல. இந்தியாவைத் தலைதூக்க முடியாதவாறு கட்டுப்படுத்தி வைத்திருந்த பழக்க வழக்கங்களெல்லாம் நீடிக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. மற்ற நாடுகளைப் பார்த்து அப்படியே காப்பியடிக்கக் கூடாதென்றுதான் சொல்லுகிறேன். கம்யூனிஸ்ட் கட்சியின் மனம், காப்பியடிக்கும் மனமென்று கூறுவதற்கு வருந்துகிறேன்.

அவர்களின் மனம் சுயமாக சிந்திக்காத மனமாகும்.

"தொழிலாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம் போன்ற பழைய சுலோகங்களெல்லாம், நவீன சிந்தனையாளர்களுக்கு பரிபூரணமாக காலாவதியாகிவிட்ட தத்துவமாகும். ஆனுலும் அதையே மந்திரம்போல திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். அதை என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை" என்று கூறினர்.

## குபேர் மந்திரி சபை....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சட்டசபை அங்கத்தினர்கள் 39 பேர்களில் 13 பேர்கள்தான் ஆதரித்ததால், தீர்மானம் படுதோல்வி அடைந்தது. எதிர்க் கட்சியினரும் புருஷோத்தம ரெட்டியார் கோஷ்டியினரும் தீர்மானத்தை எதிர்த்து ஓட்டளித்தனர். இவ்விதம் சர்க்கார் தரப்பினர் தோல்வி அடைந்துவிட்டதால் சட்டப்படி சட்டசபைக் கூட்டம் தொடர்ந்து நடைபெற முடியாது. ஆகவே சபாநாயகர் சட்டசபைக் கூட்டத்தை தேதி குறிப்பிடாமல் ஒத்திவைத்து விட்டார்.

ஒரு முக்கியமான பிரச்சினையில் நேரடி ஓட்டெடுப்பில் சர்க்கார் தோல்வி அடைந்திருப்பதால் இந்த மந்திரி சபைமீது சட்டசபைக்கு நம்பிக்கை இல்லை என்றுதான் அர்த்தம். எனவே சட்டப்படியும், நியாயப்படியும் இனி ஒரு நிமிடம்கூட இந்த மந்திரி சபை நீடித்திருக்கக்கூடாது. இத்தனை வருடங்களாக குண்டாத்தனமும், லஞ்ச ஊழலும் புரிந்து வந்து இப்போது சட்ட சபையாலும், மக்களாலும் அறவே புறக்கணிக்கப்பட்டுவிட்ட வெறுக்கப் பட்டுவிட்ட இந்த மந்திரி சபை உடனே ராஜினுமா செய்ய வேண்டும். அதோடு ஜனநாயகப் பூர்வமாக இன்னெரு மந்திரி சபை தேர்ந்தெடுக்கப்படவும் மத்திய சர்க்கார் அனுமதிக்க வேண்டும்.

இவ்விதம் எதிர்க்கட்சித் தலைவர் வி. சுப்பையா வற்புறுத்தியுள்ளார்.

## ஒரிஸா சர்க்கார் ஒரு ஓட்டில் தப்பியது!

புவனேஸ்வர், ஏப். 24—

இன்று ஒரிஸா சட்டசபையில் காங்கிரஸ் சர்க்காரின் வரிவிதிப்பு மான்யத்தின் மீது (ரூ. 11,26,903-க்கு) விவாதம் நடைபெற்ற போது, ஹரிஹரதாஸ் என்ற கம்யூனிஸ்ட் உறுப்பினர் ஒரு வெட்டுப் பிரேரணை கொண்டுவந்தார். அந்த வெட்டுப் பிரேரணைக்கு ஆதரவாக 62 ஓட்டுகளும், எதிராக 63 ஓட்டுகளும் கிடைத்து, காங்கிரஸ் சர்க்கார் ஒரு ஓட்டில் தலை தப்பியது.

## அலை ஓசை

சட்ட சபை அங்கத்தினர்களின் விளையாட்டுப் போட்டியில் ஆண்களின் வேக நடையில் கவர்னர் மேதி முதல் பரிசும் முதல் மந்திரி காமராஜ் இரண்டாவது பரிசும் பெற்றனர். —செய்தி.

போட்டியில்கூட அரசியல் சட்டப்படி கவர்னர் முதலிலும், முதல் மந்திரி இரண்டாவதும் வரும்படி நடந்துகொண்டார்கள் போலும். நோய்வாய்ப்பட்ட மாஜி அஸ்ஸாம் முதல் மந்திரி கவர்னர் ஆனதும் அவரது நோய் தெளிந்து விட்டதற்கும் இப்போட்டி ஒரு எடுத்துக்காட்டாகும்.

* *

ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஜனநாயக ஆராய்ச்சிக் கழகத்தில் பேசும்பொழுது, ரஷ்யாவுக்குக் கூட சர்வோதய எண்ணங்கள் தேவை என்ருர்.

—பம்பாய் செய்தி, எக்ஸ்பிரஸ், 4-ம் பக்கம் 14-4-58.

ஜனநாயக ஆராய்ச்சிக் கழகத்துடன் தொடர்புள்ளவர்களின் சர்வோதய எண்ணங்களைப் பற்றி (அமெரிக்க உதவி பெற்று கம்யூனிஸ எதிர்ப்பு பிரசாரமே அதன் ஆராய்ச்சி) நாடு நன்கு அறியும். ஜே. பி.யின் ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்தின் எண்ணமும் நாமும் அறிவோம்.

* *

"ஒரிஸா சட்டசபையில், அங்கத்தினர்களின் வேலைகளைப் பாதிக்கும் அளவுக்கு மூட்டைப்பூச்சித் தொல்லை அதிகம் இருப்பதால்; இதுபற்றி விவாதிக்க வேண்டும் என்று ஒரு கம்யூனிஸ்டு அங்கத்தினர் ஒரு ஒத்திவைப்பு பிரேரணையை கொண்டுவந்தார்"

—செய்தி

காங்கிரஸ் அங்கத்தினர்களை சட்டசபையில் தூங்கவிடாமல் கம்யூனிஸ்டுகள் கேட்கும் கேள்விகளே போதுமே மூட்டைப் பூச்சி வேறு வேண்டுமா? என்கிருர் உள்ளூர் தூங்குமூஞ்சி எம். எல். ஏ.

* *

"இடதுசாரிக் கட்சிகள் கம்யூனிஸ்டுக் கட்சியின் சவாலை எதிர்த்து ஒன்று சேரும்"— கொட்டை எழுத்து முதல் பக்கத் தலைப்பு—"எக்ஸ்பிரஸ்," 15-4-58

வலதுசாரிக்காரர்களான கோயங்கா பத்திரிகைகளின் பிரசார சவாலை எதிர்த்து மக்கள் ஒன்று சேரும் நாள் வெகுதூரம் இல்லை.

* *

"கேரள காங்கிரஸ் தலைவர் தாமோதர மேனன், சென்னை முதலமைச்சர் காமராஜ நாடாரை சந்தித்து தேவிகுளம் உபதேர்தல் பற்றி பேசினர்"

—செய்தி

எனது அரசாங்கம் வால்பாறையில் தோட்டத் தொழிலாளர்களுக்கு போலீஸ் உதவியால் அஹிம்சையை போதித்து நாலு உயிர்களைக் குடித்ததுபோல் உங்கள் ஊர் போலீஸ் இப்பொழுதெல்லாம் செய்ய முடியாமல் போய்விட்டதே, இனிகுளமாவது மேடாவது என்று கூறி இருக்கலாம்.

* *

"எங்கள் காமராஜ் நாடார் 60, 40 கொண்டுவந்து விட்டாரே; இனிமேல்தானே கேரளாவில் நிலச்சீர்திருத்தம் வரப்போகிறது" ஒரு காங்கிரஸ்காரர்.

ஆமாம் காமராஜ் நாடாரின் சீர்திருத்தத்தில் 60 சதம் விவசாயிகள் நிலத்தைவிட்டு விரட்டப் பட்டுவிட்டார்கள், இன்னும் கொஞ்ச காலத்தில் 40 சதம் விவசாயிகளும் விரட்டப்பட்டு, 100-க்கு 100 ஆகிவிடும் என்கிருர் நிலத்தைவிட்டு விரட்டப்பட்ட ஒரு விவசாயி.

# 3000 குடும்பங்களை காப்பாற்றுக

## தமிழக தொழிற்சங்க, விவசாயசங்க ஒத்துழைப்புக்கு வேண்டுகோள்

### எம். கல்யாணசுந்தரம் அறைகூவல்

சேலம், ஏப். 24—

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் நிர்வாகத் தலைவர் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ. விடுத்துள்ள அறிக்கை:

சேலம் மாக்னிசைட் தொழிலாளர்கள் சுமார் 3000 பேர் 15-4-58 தேதியிலிருந்து சத்யாக்கிரஹப் போராட்டம் நடத்துகின்றனர். சுமார் 600 தொழிலாளர்களுக்கு 13-4-58 லிருந்து ஆட்குறைப்பு நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. இந்த ஆட்குறைப்பு சட்ட விரோதமென்று சமரஸ அதிகாரிகள் தெரிவித்துள்ளனர். சென்னை ராஜ்ய தொழிலமைச்சர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்களும், ஆட்குறைப்பை அவசரப்பட்டு செய்ய வேண்டாமென்று நிர்வாகத்திற்கு தெரிவித்துள்ளார்.

சேலம் மாக்னிசைட் சிண்டிகேட் நிர்வாகத்தை, கல்கத்தாவிலுள்ள பர்ன் கம்பெனியார் எடுத்து நடத்த ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. பர்ன் கம்பெனியாருக்கு சுரங்க அனுமதி அளிக்கும் நிபந்தனைகளில் ஒன்று ஆட்குறைப்பு செய்யக் கூடாதென்பதாகும். இதை நம்பித்தான், சட்டசபையில் தொழிலமைச்சர், நிச்சயமாக, நிர்வாக மாறுதலால், தொழிலாளர்கள் எந்த விதத்திலும் பாதிக்கப்பட மாட்டார்களென்று உறுதி கூறினார்.

17-4-58-ம் தேதி தொழிலமைச்சர் முன்னிலையில் நடைபெற்ற சமரசப் பேச்சில் கூட, சிண்டிகேட் அதிபர், திரு. ராபின்சன், தமது லண்டன் காரியாலயத்தைக் கலந்து கொண்டு ஆட்குறைப்பு நோட்டீஸை வாபஸ் பெறுவதாக சம்மதித்தார்.

இவ்வளவு உறுதி மொழிகளையும் மீறி, 23-4-58 ந்தேதி வரை ஆட்குறைப்பு நோட்டீஸ் வாபஸ் பெறப்படவில்லை. வேலையிலிருந்து நீக்கப்பட்டுள்ள 582 தொழிலாளர்களையும் பாதுகாக்க மேலும் 2500 தொழிலாளர்கள், ஆண்களும் பெண்களும் சத்யாக்கிரஹப் போராட்டத்தில் இறங்கி உள்ளனர்.

இந்த அறப்போர், வெள்ளை முதலாளிகளை எதிர்த்து நமது தேசியத் தொழில் வளர, நம் தொழிலாளர்கள் நடத்தும் தேசியப் போராட்டமாகும். சுமார் 3000 குடும்பங்கள் பட்டினியுடன்போராடுகின்றனர்.

தமிழ் நாட்டிலுள்ள இதர தொழிற் சங்கங்கள், விவசாய சங்கங்கள் எல்லாம் இந்தப் போராட்டத்திற்கு ஆதரவளிக்க வேண்டுகிறேன்.

### டாக்டர் அகமது ராஜ்யசபையில் பதவி ஏற்றுர்

புதுடில்லி, ஏப். 22—

ராஜ்ய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள புதிய உறுப்பினர்கள் இன்று பதவி ஏற்றனர்.

உத்தரப் பிரதேசத்திலிருந்து புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கம்யூனிஸ்ட் உறுப்பினர் டாக்டர் இஜட் ஏ. அகமது பிரமாணம் செய்து பதவி ஏற்ற போது, சபையின் ஒரு பகுதியினர் பலத்த கரகோஷம்செய்து வரவேற்றனர்.

உள்நாட்டு மந்திரி பந்தும், கம்யூனிஸ்ட் எதிர்க்கட்சித் தலைவர் பூபேஷ் குப்தாவும் மீண்டும் பிரமாணமேற்றபோதும் சபையினர் அனைவருமே பலத்த கரகோஷ ஆரவாரம் செய்தனர்.

# கறுப்புச் சட்டைகளுடன் கைகோர்த்துச் செல்லும் காங்கிரசார்

## இரட்டை வேடம்பற்றி தேபர் அங்கலாய்ப்பு பதவி ஆசைபற்றி வருத்தம்

மதுரை, ஏப். 23—

காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் சிலர் இரட்டை வேஷம் போடுகிறுர்கள். ஒருபுறம் கறுப்புச் சட்டைகளுடன் (தி. க.) கைகோர்த்து நின்றுகொண்டே மறுபுறம் காங்கிரஸில் இருக்கிறுர்கள் என்று காங்கிரஸ் அக்ராசனர் தேபர் அங்கலாய்த்துக் கொண்டார். காங்கிரஸ் கட்சியைவிட்டு இவர்கள் வெளியேறுவது நல்லது என்றுர் அவர்.

தமிழ் நாட்டிலுள்ள காங்கிரஸ் ஊழியர்கள் காங்கிரஸ் சர்க்காரின் சாதனைகளைப் பற்றிப் போதனையளித்து, மக்களிடம் இவற்றைப் பரப்புவதே தமது சுற்றுப் பயணத்தின் நோக்கம் என்று தேபர் கூறினுர்.

காங்கிரஸ் ஊழியர்கள் கட்சிக்குள்ளோ, சட்டசபைகளிலோ, சர்க்காரிலோ ஏதாவது பதவி வேண்டும் என்று கவலைப்படுகிறுர்கள்; இது வருந்தத் தக்கது என்று தேபர் கூறினுர்.

### கீதா காபி சென்டரில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம்

சென்னை, ஏப். 24—

மவுண்ட் ரோடிலுள்ள 'கீதா காபி சென்டர்' ஹோட்டலில் வேலை செய்யும் ஊழியர்களுக்கும் நிர்வாகத்துக்கு மிடையே உள்ள தகராறு தற்போது லேபர் ஆபீஸர் முன் விசாரணையில் இருக்கிறது. இந்த விசாரணை முடியும்வரை எவரையும் வேலையிலிருந்து நீக்கக்கூடாது என்ற லேபர் ஆபீசரின் ஆலோசனையையும் மீறி நிர்வாகம் தொடர்ந்து பழி வாங்கிவருகிறது. இதனை எதிர்த்து ஏப்ரல் 23-ம் தேதி முதல் தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகிறுர்கள். போராட்டம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

### கச்சா பிலிம் உற்பத்தி உதகையில் தொழிற்சாலை

புதுடெல்லி, ஏப். 24—

சினிமா, எக்ஸ்ரே, புகைப்படங்களுக்கான கச்சா பிலிம்கள் உற்பத்தி செய்வதற்கு உதகையில் ஒரு தொழிற்சாலை நிறுவ சர்க்கார் திட்டமிட்டிருப்பதாக வர்த்தக அமைச்சர் மனுபாய் ஷா கூறினுர். இதற்கு ஏழரைக் கோடி ரூபாய் மூலதனம் போட உத்தேசித்திருப்பதாயும் கூறினுர். இது பற்றிய தொழில் நுட்ப விபரங்களை கிழக்கு ஜெர்மனி நிபுணர்கள் விவாதிப்பார்கள்.

# தொழிலாளர் மனுக்களுக்கு ரூ. 1 கட்டணத்தை ரத்து செய்க

## கோவை டீ, காபி தொழிலாளர் சங்கத்தின் தீர்மானங்கள்

கோவை, ஏப். 21—

கோயமுத்தூர் டீ அண்ட் காபி தொழிலாளர் சங்கத்தின்நிர்வாகக் கமிட்டிக்கூட்டம் 17-4-58 அன்று சங்கத்தலைவர் திரு. எம். குப்புசாமிக் கோனுர் தலைமையில் நடைபெற்றபோது கீழ்வரும்தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டு, சென்னை தொழில் மந்திரி, லேபர் கமிஷனர், புருக் பாண்ட் கம்பெனி சேர்மன் (கல்கத்தா), பி. எம். எஸ். பஸ் சர்வீஸ் மானேஜர், அகில இந்திய புருக் பாண்ட் பெடரேஷன் (டெல்லி) ஆகியோருக்கு அனுப்பப்பட்டுள்ளன.

#### பழிவாங்குவதுபற்றி

அலகாபாத் புருக் பாண்ட் கம்பெனி பிராஞ்சில் தொடர்ந்து வேலை செய்துவந்த பிரபாத்சிங் என்பவரை தொழிற்சங்கஊழியர் என்ற காரணத்தால் திடீரென பாட்னுவுக்கு மாற்றுவதையும், குறிப்பாக குமாஸ்தாக்களின் நியாயமான கோரிக்கைகளைக் கொடுக்காமல் காலம்கடத்திவரும் புருக் பாண்ட் கம்பெனியின் போக்கையும் நிர்வாகக் கமிட்டி வன்மையாக கண்டிப்பதுடன், மேற்படி பிரதாப்சிங்கின் மாற்றத்தை வாபஸ்பெறவும் குமாஸ்தாக்களின் நியாயமான கோரிக்கையை கொடுக்கவும் உடனே நடவடிக்கை எடுக்கவேண்டுமென நிர்வாகக்கமிட்டி மேற்படி புருக் பாண்ட் கம்பெனி நிர்வாகத்தை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறது.

#### மோட்டார் நிர்வாகம் பற்றி

கோவையிலுள்ள பி. எம். எஸ். பஸ் நிர்வாகம் மேற்படி பஸ் சர்வீஸில்வேலைசெய்யும் தொழிலாளிகளின்நியாயமான11கோரிக்கைகளையும் போனஸ் கோரிக்கையையும் கொடுக்க மறுத்து வருவதுடன் இதுவிஷயமாக தொழிலாளிகளும் தொழிற்சங்கமும் பலதடவை சுமூகமான பல நடவடிக்கைகளை மேற்கொண்டும் நிர்வாகம் பிடிவாதமாக 2. முக்கிய தொழிற் சங்க ஊழியர்களையும் பழிவாங்கியுள்ள போக்கை நிர்வாக கமிட்டி வன்மையாகக் கண்டிப்பதுடன் சர்க்கார் இதுவிஷயத்தில் தலையிட்டு இப் பிரச்சினைக்கு ஒரு தொழில்கோர்ட் ஏற்படுத்திக் கொடுத்து 26.4-58ம் தேதி நடக்கவிருக்கும் வேலைநிறுத்தப் போராட்டத்தை தவிர்க்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென சென்னை சர்க்காரையும் பஸ் முதலாளியையும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறது.

#### கோர்ட்பீஸ் ஸ்டாம்ப்

தொழிலாளர் கோரிக்கைகள் சம்பந்தமான விண்ணப்பம் ஒன்றுக்கு ரூ. 1 கோர்ட் பீஸ் ஸ்டாம்பு ஒட்டவேண்டுமென விதித்திருப்பதை நிர்வாகக்கமிட்டி ஆட்சேபிப்பதுடன் அதை உடனடியாக ரத்து செய்யவேண்டுமென்றும் சென்னை சர்க்காரை வற்புறுத்துகிறது.

### சேலம் தோல் ஷாப் முதலாளியின் கல் நெஞ்சம்!

சேலம், ஏப். 20—

சேலம் நாராயண செட்டியார் தோல் ஷாப்பில் ஆட்குறைப்பு செய்ய நிர்வாகம் நடவடிக்கை எடுத்ததும் தொழிலாளர்கள் ஆட்சேபித்ததும் அதன் காரணமாக தோல் ஷாப் கதவடைப்பு செய்யப்பட்டதும் நேயர்கள் அறிவர். கதவடைப்பை ரத்து செய்து தோல் ஷாப்பைத் திறக்குமாறு சர்க்கார் உத்திரவிட்டது. ஆயினும் நிர்வாகம் அசையவில்லை.

கதவடைப்பு சம்பந்தப்பட்ட பிரச்சினை தொழில் நீதிமன்றத்திற்கு விடப்பட்டுள்ளது. இந்த சமயத்தில் நிர்வாகம் தொழிலாளர்கள் குடியிருப்பு மனைகளிலிருந்து ஒரு வார காலத்தில் வெளியேற வேண்டுமென தொழிலாளர்களுக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளது. (ந. நி.)

### பெட்ரோல் விலைகளைக் குறைக்க கம்பெனிகள் மறுப்பு

#### ராஜ்ய சபையில் மந்திரி மழுப்பல்

புதுடெல்லி, ஏப். 23—

இந்தியாவிலுள்ள விதேசி எண்ணெய்க் கம்பெனிகள் பெட்ரோல் விலையைக் குறைக்க மறுத்து வருவது பற்றி ராஜ்ய சபையில் சரமாரியாகக் கேள்விகள் எழுந்தன. இதர நாடுகளைவிட இந்தியாவில் பெட்ரோல் அதிக விலைக்கு விற்கப்படுகிறது.

விலைகளைக் குறைக்க வேண்டும் என்று கோரி இக்கம்பெனிகளுடன் சர்க்கார் பேச்சுவார்த்தைகள் நடத்திவந்தது. ஆனுல் பலன் ஏற்படவில்லை.

பேச்சுவார்த்தைகளின் விபரம் பற்றி எதுவும் கூற முடியாது என்று மந்திரி கே. டி. மாளவியா மழுப்பி விட்டார்.

## நடக்க இருப்பவை

### தமிழ்நாடு முனிசிபல் பஞ்சாயத்து தொழிலாளர் மாநாடு

திருச்சி, ஏப். 25—

தமிழ்நாடு முனிசிபல் பஞ்சாயத்து தொழிலாளர் 2-வது மாநாடு திருச்சி தேவர்மன்றத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஏ எஸ். கிருஷ்ணமூர்த்தி நினைவு அரங்கில் நாளை(26-4-58) ஆரம்பமாகிறது. மாநாட்டைஒட்டி திருச்சி நகரெங்கும் வளைவுகளும், தோரணங்களும் கண்ணைக் கவரும் வண்ணம் காட்சியளிக்கின்றன. மகாநாட்டை வாழ்த்தி மாஸ்கோ, நவசீனு, இந்தோனேஷ்யா, கொரியா, பெர்லின் ருமேனியா முதலிய இடங்களிலிருந்து வாழ்த்துத் தந்திகள் வந்த வண்ணமுள்ளன.

#### மகாநாட்டு நிகழ்ச்சிகள்

**26-4-58 சனி**

காலை 10 மணிக்கு மகாநாடு ஆரம்பம். கொடி யேற்றுபவர் கே. பி. ஜானகி. திறப்பாளர்: கே. சட்டநாத கரையாளர் பி ஏ., எம்.எல்.ஏ., தலைவர்: கே. ஏ. சாரி, ஆகியோர் சொற்பொழிவாளர்கள்: மூகவை ராஜமாணிக்கம், வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ., பி. பாப்பா முதலியோர்.

**27-4-58 ஞாயிறு**

பிரதிநிதிகள் கூட்டம்—தீர்மானங்கள்மீது விவாதம்.

மாலை 5 மணிக்கு மெயின்கார்டு கேட்டிலிருந்து தோழர் எம். கல்யாணசுந்தரம் தலைமையில் பிரமாண்டமான ஊர்வலம் புறப்படும். இரவு 7 மணிக்கு டவுன் ஹால் மைதானத்தில் மாபெரும் பொதுக்கூட்டம். தோழர்கள் கல்யாணசுந்தரம், கே ஏ. சாரி, கே. சட்டநாத கரையாளர் ஆகியோர் பேசுவர்.

### மணச்சநல்லூர் கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்க ஆண்டு விழா

மணச்சநல்லூர், ஏப். 20—

திருச்சிராப்பள்ளி கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்கத்தின் மணச்சநல்லூர் கிளையின் ஆண்டுவிழா இன்று பு. ரெ. மாரிமுத்து அவர்கள் தலைமையில் நடைபெற்றது ஆர். சக்ரபாணி, எம். எஸ். மணி. கே. எஸ். மணி, கு மணிமொழி, ம. ப. ஆறுமுகம் ஆகியோர் பேசினர்.

கைத்தறி ஜவுளி விற்பனையில் ரூபாய்க்கு 2 அணு ரிபேட் நீடித்துக் கொடுக்க வேண்டுமென்றும், தேங்கியுள்ளகைத்தறித்துணிகளை சர்க்காரே கொள்முதல் செய்ய வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பிறகு சங்கத்திற்கு எம். பி. நரசிம்மய்யர் தலைவராகவும், ரா. ராஜு செயலாளராகவும், இதர நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### கேரளத்தில் கூட்டுறவு ஆயுர்வேத மருத்துவசாலை

#### ரூ. 10 லட்சம் மூலதனத்தில் துவங்கும்

கோட்டயம், ஏப் 23—

கேரளத்தில் ஆயுர்வேத மருந்துகளை உற்பத்தி செய்வதற்காக சர்க்கார் கூட்டுறவு முறையில் ஒரு ஆயுர்வேத மருந்துசாலையை நிறுவ உத்தேசித்திருப்பதாக கேரள சுகாதார அமைச்சர் டாக்டர் ஏ. ஆர் மேனன் கூறினுர். இதற்கு ரூ. 10 லட்சம் மூலதனம் போடப்படும் என்றுர்.

## குழந்தைப் புத்தகக் கண் காட்சி

**25-4-58 வெள்ளி மாலை**

குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்தும் எட்டாவது குழந்தைப் புத்தகக் காட்சியை—திரு. ஏ. வி. மெய்யப்பன் துவக்கி வைப்பார், திரு பகீரதன், திருமதி சௌந்தரம் கைலாசம் சொற்பொழிவாற்றுவர். 1956—57-ல் சிறந்த முறையில் குழந்தைப் புத்தகத்திற்குப் படம் வரைந்துள்ள ஓவியருக்குப் பரிசளிப்பு, ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி, தங்கசாலைத் தெரு, சென்னை-1. மாலை 6 மணி.

**26-4-58 சனி**

குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்தும் எட்டாவது குழந்தைப் புத்தகக் காட்சி, காலை 9 முதல் 12 பிற்பகல் 2 முதல் 8 மணி. பிற்பகல் 2 முதல் 4 மணி வரை குழந்தைகளுக்குப் பிரபல குழந்தை எழுத்தாளர்கள் கதை சொல்லுவர்.

மாலை 6-30 மணிக்கு அமெரிக்கச் செய்தி நிலையத்தார் குழந்தைகளுக்கு சினிமா காட்டுவர். ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி, தங்கசாலைத் தெரு, சென்னை-1.

**27-4-58 ஞாயிறு**

குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்தும் எட்டாவது குழந்தைப் புத்தகக் காட்சி, காலை 9 முதல் 12, பிற்பகல் 2 முதல் 8 மணி. பிற்பகல் 2 முதல் 4 வரை குழந்தைகளுக்குப் பிரபல குழந்தை எழுத்தாளர்கள் கதை சொல்லுவர்.

ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி, தங்கசாலைத் தெரு, சென்னை-1.

### ஆந்திராவில் அரிசி உற்பத்தி அதிகரிக்கும்

புதுடெல்லி, ஏப். 23—

நடப்பு வருடத்தில் ஆந்திர ராஜ்யத்தில் உபரியாக 8 லட்ச முதல் 10 லட்சம் டன் அரிசி அதிகமாக உற்பத்தியாகும் என்று மத்திய சர்க்கார் உதவி உணவு மந்திரி ஏ. எம். தாமஸ் கம்யூனிஸ்ட் எம்.பி., ரேணு சக்ரவர்த்தியின் கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினுர்.

### கௌஹாத்தியில் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை

#### ருமேனிய உதவியை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டது

புதுடில்லி, ஏப். 23—

அஸாமில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையை ஏற்படுத்துவதற்குத் தாங்கள் உதவி செய்யத் தயார், என்று ருமேனிய சோஷலிஸ்ட் குடியரசு சர்க்கார் ஏற்கனவே இந்திய சர்க்காருக்குத் தெரிவித்திருந்தது.

அதை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டுவிட்டனரென்று இன்று ராஜ்ய சபையில் சுரங்க, எண்ணெய் மந்திரி திரு. கே. டி. மாளவியா, திருமதி யசோதரா ரெட்டியின் கேள்விக்கு பதிலளிக்கையில் தெரிவித்தார்.

# பல்வேறு கட்சிகளும் இயங்குவதற்கு பார்லிமெண்டரி 'மரபுகள்'

## ஒரு சமஷ்டி அமைப்பில் ராஜ்ய சர்க்காருக்கு சுயாட்சி உரிமை

### கேரள கல்வி மசோதாவும் ஜனதிபதி தலையீடும்

### கேரள சர்க்கார் மகஜர் தரும் தகவல்கள்

புதுடெல்லி, ஏப். 22—

**இந்தியாவில் பார்லிமெண்டரி ஜனநாயக முறை செவ்வனே இயங்க வேண்டும் என்ருல் பல்வேறு அரசியல் கட்சிகளும் சுதந்திரமாக இயங்கவும், ராஜ்யங்களில் ஆளும் கட்சிகளாகச் செயல்படவும் தகுந்த வாய்ப்புகளை அளிக்கும் ஆரோக்கியகரமான மரபுகள் ஏற்பட வேண்டும்.**

கேரள கல்வி மசோதாபற்றி கேரள சர்க்கார் சமர்ப்பித்துள்ள மகஜரில் மேலே குறிப்பிட்ட பிரச்சினை எழுப்பப் பெற்றிருப்பதாகத் தெரிய வருகிறது.

கேரள கல்வி மசோதாவை சுப்ரீம் நீதிமன்ற விசாரணைக்கு ஜனதிபதி விட்டிருக்கிருர். இது பற்றி கேரள சர்க்கார் சமர்ப்பித்த மகஜரில் இந்த விஷயம் பிரதானமாயும் ஒரு ராஜ்யம் சம்பந்தப்பட்ட ஒன்று என்று சுட்டிக் காட்டப் பெற்றுள்ளது. இந்திய அரசியல் சட்டத்தின் 31-வது விதியின் பிரகாரம் சொத்துக்களைக் கட்டாயமாக சர்க்கார் எடுத்துக் கொள்ளும் விஷயத்தில்தான் ஜனதிபதியின் அங்கீகாரம் நிறுத்திவைக்கப் படலாம். மசோதாவின் ஆரம்ப நகல் பற்றி மத்திய சர்க்காருடன் விவாதித்து அதன் ஆலோசனைகளின் பிரகாரம் மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன என்று இந்த மகஜர் கூறுகிறது.

இந்த மசோதா ஒரு முற்போக்கான சட்டம் பயன்மிக்க ஒரு நடவடிக்கை என்பதைத் தெரிந்து சுப்ரீம் நீதிமன்றம் சாதகமாகப் பார்க்கும் என்ற நம்பிக்கையைத் தெரிவிக்கும் இந்த அறிக்கை கல்வி பூரணமாகவும் ஒரு ராஜ்ய அதிகாரத்திற்குட்பட்ட விஷயம் என்று சுட்டிக் காட்டுகிறது.

இந்திய ஜனதிபதியின் நிலைமை அமெரிக்க ஜனதிபதியைப் போன்றதல்ல, கிட்டத்தட்ட பிரிட்டிஷ் ராணியின் நிலைமைக்கு சமமானது என்றும், இந்தியா பிரிட்டிஷ் பார்லிமெண்டரி மரபுகளை அனுசரித்து வருவதாயும், எனவே ராஜ்ய விவகாரங்கள் வரும்போது சம்பந்தப்பட்ட ராஜ்ய சர்க்காரின் ஆலோசனைகளை ஜனதிபதி கோர வேண்டும் என்றும இந்த மகஜர் குறிப்பிடுகிறது. இல்லாவிட்டால் ராஜ்ய மட்டத்தில் மக்களுக்குப் பொறுப்புள்ள ஆட்சி இருப்பதையே அழித்துத் துடைத்துவிடும் நிலை ஏறபடும்,

#### ராஜ்ய சுயாட்சி உயிர் நாடியானது

ஒரு சமஷ்டி உருவில் உள்ள அரசாங்கக் கட்டுக் கோப்பில், ராஜ்யத்தின் சுயாட்சி உரிமை அடிப்படையானது, ஜீவாதாரமானது. ஒதுக்கப்பெற்றுள்ள வட்டத்திற்குள் ராஜ்ய சட்டசபைகளின் அரசுரிமை மக்கள் கட்டிக் காக்க வேண்டிய ஒன்று. இதைக்கருத்துடன் பேண வேண்டுவது அரசியல் சட்டத்தின் காவலனுக நிற்கும் ஜனதிபதியின் கடமையும் கூட.

ஒரு ராஜ்யத்தில் மத்திய சர்க்காரில் அதிகாரத்திலுள்ள கட்சிக்குநேர் விரோதமான ஒருகட்சியினர் அதிகாரத்தில் உள்ளனர். மத்தியில் அதிகாரத்திலுள்ள கட்சி இந்த மாகாண சட்டசபைகளில் நிறைவேற்றப்படும் சட்டங்களில் தலையிட ஜனதிபதியை வற்புறுத்துகிறது. இத்தகைய கட்டத்தில்தான் மேலே குறிப்பிட்ட 'மரபு' முக்கியத்துவம் பெறுகிறது, அதாவது மத்திய சர்க்கார் தூண்டுதலால் ஜனதிபதியின் அதிகாரம் பயன் படுத்தப்படுவதன் விரும்பத்தகாத நிலை நேர்மையற்ற நிலை தெரிய வருகிறது.

இங்கு ஒரு கட்சிக்கு மேல் அதிக கட்சிகள் இருக்கும் என்ற அடிப்படையில்தான் நமது பார்லிமெண்டரி ஜனநாயகம் இருக்கிறது. அதோடு நமது நாட்டில் ஏற்பட்டுள்ள அரசியல் வளர்ச்சியின் விளைவாக பல்வேறு கட்சிகள் ராஜ்யங்களிலும் யூனியன் மட்டத்திலும் மக்கள் வாக்குகளைப் பெற்று அதிகாரத்திற்கு வரும் வாய்ப்புகள் உள்ளன. எனவே இந்தக் காலகட்டத்தில் இந்தத் துறையில் நல்ல மரபுகளைப் பேணி வளர்ப்பது உஷாருடன் செய்ய வேண்டிய ஒரு முக்கியமான பணியாகும்.

தான் அதிகாரத்தில் வந்துள்ள ஒரு ராஜ்யத்தில் ஒவ்வொரு கட்சிக்கும் நிர்வாகம் நடத்த,அரசியல் சட்டத்திற்குட்பட்டு மக்களிடமிருந்துவரும் வேண்டுகோளுக்கு மதிப்பு வைத்து சட்டங்களைக் கொண்டுவர சரிசமமான சுதந்திரம் அவசியம். இந்த உரிமையை அமுலாக்க வேண்டுமானுல், அரசியல் சட்டப்படி ராஜ்ய சர்க்கார்கள் கொண்டுவரும் சட்டங்கள் விஷயத்தில் பிரஸ்தாப ராஜ்ய சர்க்கார் மந்திரிகளின் ஆலோசனைகளுக்கு விரோதமாக ஜனதிபதி நடந்துகொள்ளமாட்டார் என்ற வழக்கு நிச்சயமாக ஏற்பட வேண்டும்.

இந்திய அரசியல் சட்டம் மத்திய சர்க்காருக்கும் ராஜ்யசர்க்கார்களுக்குமிடையே,கடமைகளையும், அதிகாரங்களையும் பிரித்துப் பகிர்ந்துகொள்ளும் கோட்பாட்டின் அடிப்படையில் உருவாக்கப் பட்டிருக்கிறது. எனவே ஒரு ராஜ்யம் மத்திய சர்க்காருக்குக் கீழ்ப்பட்டதல்ல, தனது சொந்தத் துறையில் சுதந்திரமாக இயங்கும் அரசுரிமை உள்ளது என்று கேரள சர்க்கார் சார்பில் வாதிக்கப்பட்டுள்ளது.

ராஜ்யங்களும் மத்திய சர்க்காரும் ஒரு சமஷ்டி அமைப்பின் பங்காளிகள், எனவே ராஜ்ய சர்க்கார்களுக்கு ஜனதிபதிக்கு ஆலோசனை கூறப் பூரண உரிமையுண்டு.

இந்த மசோதாபற்றி மக்கள் சபையில் விவாதிக்க உரிமை இல்லை என்று மக்கள் சபை சபாநாயகர் கூறியதையும் இந்த மகஜர் சுட்டிக் காட்டுகிறது. மத்திய சர்க்கார் மந்திரிகள் மக்கள் சபைக்குப் பொறுப்புள்ளவர்கள். அவர்களுக்கு ஜனதிபதி இந்த மசோதாபற்றி என்ன செய்ய வேண்டும் என்று ஆலோசனைகூற உரிமை உண்டு என்ருல் அவர்களுடைய நடவடிக்கை பற்றி பார்லிமெண்டில் பகிரங்கமாக விவாதிக்கக் கோருவது தவரு?

சபாநாயகர் தீர்ப்பு, மத்தியசர்க்காருக்கு ராஜ்ய மசோதாபற்றி ஜனதிபதிக்கு ஆலோசனைகூற உரிமை இல்லை என்பதை வலியுறுத்துவதாக மகஜர் கூறுகிறது. ராஜ்ய விவகாரங்கள தவிர மறறவற்றில் மக்கள்சபை கவனம் செலுத்துவதால், மத்திய சர்க்கார் இந்த மசோதா விஷயத்தில் நேராகவோ மறைமுகமாகவோ ஜனதிபதியிடம் ஆலோசனைகூற அதிகாரமுண்டா என்று கேட்கப் படுகிறது.

கேரள மசோதா ஆந்திரக் கல்வி மசோதாவை மீறி எந்த விஷயத்திலும் போகவில்லையென்றும் சிறுபான்மையோர் உரிமைகள் மீறப்படுவதாக கூறுவது சரியல்ல, ஏனெனில் கிறிஸ்தவர்கள் கேரள ராஜ்யத்தில் சிறுபான்மையர் என்று உரிமை பாராட்ட முடியாது என்றும் குறிப்பிடுகிறது.

கேரள சர்க்கார் சார்பில் பிரபல பிரிட்டிஷ் வழக்கறிஞர் டி. என். பிரிட் சுப்ரீம் நீதிமன்றத்தில் வாதாடுவார். —ஐ. பி. ஏ.

# ரயில்வே பென்ஷன் திட்டம்பற்றி சர்க்கார் புனராலோசனை செய்யுமா?

## மக்கள் சபையில் தங்கமணி கேள்வி

புதுடில்லி, ஏப். 22—

பழைய பிராவிடண்ட் பண்ட்-கிராஜுடி திட்டத்தினுல் அதிக நன்மை இருப்பதினுல் மிகவும் குறைந்தஅளவு ரயில்வேத் தொழிலாளிகளே சர்க்காரின் புதிய பென்ஷன் திட்டத்தை விரும்பி ஏற்றுக் கொண்டிருப்பதினுல், பென்ஷன் திட்டத்தை அமுல் படுத்தும் விஷயத்தை சர்க்கார் புனராலோசனை செய்யுமா என்று மக்கள் சபையில் தோழர் கே. டி. கே. தங்கமணி (17-4-58) ஒரு கேள்வி கேட்டார்.

மந்திரி ஜகஜீவன்ராம் பதில்: அங்கத்தினரின் நிர்ணயிப்பு சரியல்ல. பென்ஷன் திட்டம்பற்றித் தொழிலாளரிடையே அதிக விளம்பரமில்லாததினுல்தான் இந்தநிலைமை. பென்ஷன் திட்டத்தை ஹிந்தியிலும், இதர பிரதேச மொழிபெயர்த்துள்ளோம். தேர்ந்தெடுக்கும் காலவரையை நீடித்துள்ளோம். பிராவிடண்ட்பண்ட் திட்டத்தைவிட பென்ஷன் திட்டம்தான் அதிக நன்மை பயப்பது என்பதில் சந்தேகமில்லை. 3-ம் வகுப்பு, 4-ம் வகுப்பு ஊழியர்களுக்கு சரியாக விளக்கினுல்அவர்களில் பெருவாரியானவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை.

தங்கமணி: இதர மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு ரூபாயில் 8 அணுவைப் பென்ஷனுகக் கொடுக்கும்போது ரயில்வேத்தொழிலாளருக்கு 6 அணுதான் கொடுக்கப்படுவது உண்மையா? மேலும், பிராவிடண்ட் நிதிக்கு அடிப்படைச் சம்பளத்தில் $8\frac{1}{3}$ சதவிகிதமும் பாதி பஞ்சப்படியும் சேர்க்கப்படுகிறது. ஆனுல் பென்ஷன் திட்டத்தின்படி ஒரு 4ம் வகுப்புத் தொழிலாளிக்கு குறைந்தபட்சம் ஏற்படும் என்பது உண்மையா?

மந்திரி பதில்: அது சரியல்ல; ரயில்வேயில் பென்ஷன் திட்டத்தை இதர சர்க்கார் ஊழியர்களுக்கு இருப்பதைப்போல்தான் வகுத்துள்ளோம் ஆனுல் 4ம் வகுப்புத் தொழிலாளி—30 வருட சர்வீசுக்கு அதிகமானவர் விஷயத்தில் பென்ஷன் திட்டத்தின் கீழ் (பிராவிடண்ட் பண்டைவிட) கொஞ்சம் குறைவாகக் கிடைக்கலாம். அதற்காக நாங்கள் ஒவ்வொரு வருஷ சர்வீசுக்கும் ரூ. 200 அதிகமாகக் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளோம்.

பிரபாத்கார்: (கம்யூ. எம். பி.) தென்பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் தங்களுடைய சமீப மகாநாட்டுக்குப் பிறகு, இந்தப் பென்ஷின் திட்டத்திற்கு ஒரு விரிவான திருத்தம் அனுப்பியிருக்கிருர்களா?

மந்திரி: இல்லை; அவ்வாருென்றும் வரவில்லை.

தங்கமணி ஏதோ பேச எழுந்தார்.

சபாநாயகர்: அடுத்த கேள்வி.

# ஸ்புட்னிக் யுகத்தை அனுசரித்து முன்னேறுக

## இளைஞர்களுக்கு இ. எம். எஸ். அறிவுரை

கோட்டயம், ஏப். 20—

மனிதன் ஊகிக்க முடியாத அளவுக்கு வேகமாக உலகம் முன்னேறிக் கொண்டிருக்கும் இந்த ஸ்புட்னிக் யுகத்தில் நம் நாட்டிலுள்ள யுவர் யுவதிகள் தமது ஆற்றல்களை கலை கலாசாரத் துறை அளவில் மட்டுமின்றி விஞ்ஞானத் துறையிலும் வளர்த்துக் கொள்ள முன்வரவேண்டும் என்று இங்கு நடைபெற்ற வாலிபர் விழாவைத் தொடங்கி வைத்துப் பேசிய கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். கூறினுர்.

இளைஞர்கள் சுதந்திரமாகச் சிந்தனை செய்யவேண்டும். தம் அறிவாற்றல்களைப் பயன்மிக்க முறையில் வினியோகிக்க வேண்டும். இதற்கு உற்சாகமும் ஊக்கமும் அளிக்கத் தகுந்த திட்டங்களை வாலிபர் ஸ்தாபனங்கள் நிறைவேற்றவேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

நமது நாடு பிரம்மாண்டமான தேசியப் புனர் நிர்மாண வேலைகளில் ஈடுபட்டிருக்கிறது. இதற்கு நாடகங்களும் கலாநிகழ்ச்சிகளும் அவசியமே. ஆனுல் மனிதன் ஒரு முழு மனிதன். ஒரு முழுமனிதனுக வளர வேண்டும் என்ருல் இத்துறைகளுடன் விஞ்ஞான அறிவும் பெறல் வேண்டும்.

முன் காலங்களில் மனிதனுல் கற்பனைகூடச் செய்யமுடியாமலிருந்த பல காரியங்கள் இன்று நம் கண்முன்னே காண்கிருேம். குழந்தைகள் அம்புலி மாமாவைப் பிடிக்க கேட்பதை நாம் வர்ணித்ததுண்டு. இன்ருே செயற்கைச் சந்திரனை சிருஷ்டித்துவிடும் ஆற்றலை உலகு பெற்றுவிட்டது.

நாள் செல்லுந்தோறும் மனிதன் இயற்கையின் மர்மங்களை அறிந்து இயற்கையின் சக்திகளைக் கீழடக்கி மனித ஜாதிக்குப் பயன் தருமுறையில் ஈடுபடுத்தும் வாய்ப்பைப் பெறுகிருன். இந்த முன்னேற்றத்தால் நமது உணர்வும் அறிவும் விசாலமடைகின்றன. இதில் வாலிபர்களுக்கு மற்றவர்களைக் காட்டிலும் அதிக வாய்ப்புள்ளது

மற்ற நாடுகளைப்போல நம் நாட்டு இளைஞர் விஞ்ஞானப் புதுமைக்ளைக் கண்டுபிடிக்கும் பேற்றினைப் பெறவேண்டும் என்ருர்.

# தீப்பெட்டி தொழிற்சாலை ஏற்படுத்துக

## திருமங்கலம் தீப்பெட்டி தொழிலாளர் யூனியன் சர்க்காருக்கு மகஜர்

திருமங்கலம், ஏப். 22—

திருமங்கலம் தாலுக்கா தீப்பெட்டித் தொழிலாளர் யூனியன் சார்பில் சென்னை சர்க்காரின் தொழில், வர்த்தகடைரக்டர் திரு. டி. கே. பழனியப்பன் எம் ஏ. (ஐ. ஏ. எஸ்) அவர்களுக்கு அனுப்பப்பட்டுள்ள மகஜர் ஒன்றில் திருமங்கலத்தில் அரசினர் தீப்பெட்டித் தொழிற்சாலை ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டுள்ளது. அந்த மகஜரில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"அரசியலாரால் தீப்பெட்டித் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு இவ்வூர் பலவகையாலும் தகுதி பெற்ற இடமாகும்.

இத்தொழில் தெரிந்த தொழிலாளர்கள் இவ்வூரில் ஆயிரக்கணக்கில் உள்ளனர். இத்தொழிலாளர்கள்மாதம் சுமார் ரூ 30,000 வருமானம் பெற்றுவந்தனர். சுமார் 2 வருட காலமாக இங்கு இரண்டு தீப்பெட்டித் தொழிற்சாலைகள் மூடப்பட்டுக் கிடக்கின்றன. கடந்த ஒரு மாத காலமாக 3-வது தீப்பெட்டித் தொழிற்சாலையும் மூடப்பட்டுள்ளது. இதனுல் இங்கு பொருளாதார நிலையும் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

தொழிலின்றித் தவிக்கும் இந்த ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைக்கொண்டு அரசியலார் இந்நகரில் தீப்பெட்டித் தொழிற்சாலை தொடங்கினுல், சர்க்காருக்கும் லாபம் கிடைக்கும். ஆயிரக்கணக்கான தொழிலாளிகளுக்கும்வேலை கிடைக்கும்.

ஆகவே இங்கு ஒருதீப்பெட்டித் தொழிற்சாலையை ஏற்படுத்த சர்க்கார் விரைவில் ஆவன செய்ய வேண்டும்.

## கவி தாகூர் செய்திப் படம்

புதுடில்லி, ஏப். 20—

விசுவகவி ரவீந்திரநாத் தாகூரின் 100வது ஜென்ம தினத்தன்று தாகூரின் வாழ்க்கை பற்றிய ஒரு செய்திப்படம் வெளியிட தயாராகி வருகிறது.

# பிரிட்டிஷ் நிர்ப்பந்தத்திற்கு பணியமறுக்கும் லாஹஜ்

## தலைவர்களைக் கைதுசெய்ய பிரிட்டிஷ் படை

லண்டன், ஏப். 23—

எகிப்து-சிரியா-ஏமன் மூன்றும் இணைந்து உருவாக்கப்பெற்றுள்ள ஐக்கிய அரபுக்குடியரசில் சேரக் கூடாது, போட்டியாக பிரிட்டிஷ் தாசர்கள் அமைக்கும் கூட்டணியில் சேர வேண்டும் என்று பிரிட்டன் ஏடன் பகுதியிலுள்ள சிறு நாடுகளை நிர்ப்பந்தித்து வருகிறது.

இப்பகுதியிலுள்ள ஒரு நாடான லாஹஜ் இந்த பயமுறுத்தலுக்குப் பணிய மறுத்துள்ளது. அதோடு இதன் பிரதானத் தலைவர்கள் மூவர்—சட்ட சபைத் தலைவர் கல்வியமைச்சர், அரபு லீக் தலைவர் மூவரும் ஐக்கிய அரபுக் குடியரசில் சேர்வதை ஆதரித்தனர்.

எனவே பழிவாங்கல் நடவடிக்கையாக பிரிட்டிஷ் படைகள் இங்கு அனுப்பப்பட்டு அந்த மூன்று தலைவர்களையும் கைது செய்ய வேட்டையாடுகின்றன.

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆதிக்கத்தை எதிர்த்து ஏடன் பகுதியிலுள்ள 17 சிறு நாடுகளிலும் புரட்சி கிளம்பிவிட்டது என்று இந்த எழுச்சியை எகிப்திய பத்திரிகை வர்ணிக்கிறது.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, Madras-1.
Editor: P. JEEVANANDAM.